




# தமிழ் நூல் விவர அட்டவணை

## (The Madras State Tamil Bibliography)

## 1867-1900

முதல் தொகுதி—முதல் பகுதி

(Volume I—Part I)



பொதுப் பதிப்பாசிரியர் :

**வெ. கண்ணையன், பி.ஏ.,**

செயலாளர்,

தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்

பதிப்பாசிரியர் :

**மு. சண்முகம்**

கண்காணிப்பாளர்

தமிழ்நாடு அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்ற வெளியீடு

1961

[விலை : ரூ. 8.




# முன்னுரை

உரிமை எழுச்சிக்கு அஞ்சிய ஆங்கிலத் துரைத்தனம் இந்திய மொழிகளில் நூல்களை அச்சிடுதல் ஆகாது என்று சட்டம் செய்தது. பின்னர், சில நல்லெண்ணம் படைத்த ஆங்கிலஅலுவலாளர்களின் முயற்சியால் இத் தடை நீங்கியது. அக்காலத்தில் மருடாக் என்பவர் ஓர் அட்டவணையை வெளியிட்டார். சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் 1867 தொடங்கி, பல்லாயிரக் கணக்கான புது நூல்களும் பழைய நூல்களின் பதிப்புக்களும் வெளிவந்துள்ளன.

1867-ஆம் ஆண்டு தொடங்கி அச்சேறிய தமிழ் நூல்களுள் பதிவு செய்யப்பெற்றவை அனைத்தும் அரசாங்கத்தாரால் பிறமொழி நூல்களிலிருந்து பிரிக்கப்பெற்றுத் தனியே வைக்கப்பெற்றுள்ளன. இந் நூல்களுக்கு விளக்க அகராதி ஒன்று தயாரிக்க ஏற்பாடாகியிருக்கின்றது. இவற்றைப் பற்றிய ஓர் அகராதி தயாரிப்பதால் உண்டாகும் பயன் என்ன என்று சிலர் நினைக்கலாம். இந்த நூல் விவர அட்டவணை நான்கு பயன்களைச் செய்யும். முதலாவது, தமிழ் மொழியில் ஒரு நூற்றாண்டில் எத்துணை நூல்கள் வெளிவந்துள்ளன என்பதை அறிய இது ஒரு வாய்ப்பு. இரண்டாவது, ஆராய்ச்சியில் ஈடுபடுபவர்கட்குத் தேவையான விஷயங்கள் பலவற்றை இந்த அட்டவணை தருகிறது. மூன்றாவது, பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாறு எழுதப்படுமானால் இந்த அட்டவணையின் பூரண பயனை அடைய முடியும். நான்காவதாக, இந்த ஒரு நூற்றாண்டில் தமிழ் மொழி,

அதன் இலக்கியம், தமிழ் நூல்கட்குப் பெயரிடும் விதம், தமிழ் நூல்களை அச்சிட்ட அச்சியந்திர சாலைகள் ஆகியவற்றின் வளர்ச்சியை அறியவும் இந்த அட்டவணை உதவும்.

தமிழை ஆட்சி மொழியாகவும், கல்லூரிப் பயிற்சி மொழியாகவும் பயன்படுத்தத் தொடங்கிவிட்டோம். இந்த நேரத்தில் இந்த மொழியின் வளர்ச்சியை ஆராய முற்படுபவர்கட்கு இத்தகைய அட்டவணை ஒன்றைச் சீர்செய்து கொடுப்பது அவசியமாகும். தமிழ்மொழி வளர்ச்சியில் ஆர்வம் உள்ளவர்களுக்கு இந்நூல் பெரிதும் பயன்படும் என்று நம்புகிறேன்.

**சென்னை,** **சி. சுப்பிரமணியம்,**
*19-9-61.* *சென்னை நிதி-கல்வி அமைச்சர்.*




# முகவுரை

## நூல்களை எழுதிப் போற்றியமை

தமிழகத்திலே பல நூற்றாண்டுகளாகப் பற்பல கலைத்துறை பற்றிய எத்தனையோ வகையான நூல்கள் தோன்றி வந்திருக்கின்றன. ஆயினும், மிக முற்பட்ட காலத்து நூல்களுள் பல தக்கவண்ணம் பாதுகாத்து வைக்கும் வசதி இன்மையாலும், வேறு பல சூழ்நிலைகளாலும் இறந்து பட்டன. இயற்கையின் சீற்றங்கள், மன்னர்களிடையே நிகழ்ந்த போர்கள், அரசியல் மாறுதல்கள், மக்களின் குடி பெயர்ச்சி முதலியன பலவும், ஏற்ற வகையில் நூல்கள் பாதுகாப்பதற்கு வழிவகை இன்றி, அழிவெய்துவதற்கு ஏதுவாயின. மக்களின் உளங்களை மிகுதியும் கவர்ந்த சிறந்த நூல்களே ஓரளவு நிலைத்து வந்திருக்கின்றன எனலாம். ஒரு சில நூல்கள் பெயரளவில்தான் நமக்கு இன்று தெரிய வருகின்றன. மிகப் பழங் காலத்தில் "ஏடு ஆயிரங்கோடி எழுதாது தம் மனத்தே எழுதிப் படித்துப் போற்றும்" வழிவழியாக வந்த கேள்வி முறையில் தான் நூல்கள் முதலியன போற்றப் பெற்றிருத்தல் கூடும். எழுத்து வரிவடிவங்களும், ஏடும் எழுத்தாணியும் வழங்கிய காலத்திலே நூல் களுக்குப் படி பல எழுதிப் பாதுகாத்து வரலாயினர். தமிழ் மன்னர்கள் பலர் தாம் பட்டத்திற்கு வந்ததும் அழியும் நிலையிலுள்ள நூல்களை யெல்லாம் படியெடுத்துத் தம் கையெழுத்திட்டு வைப்பதை வழக்க மாகக் கொண்டிருந்தனர் என்று தோன்றுகின்றது. ஓலை ஏடுகள் நீண்ட நாள் நிலைத்திருத்தல் அரிதாதல் கண்டு, கல்லிலும், செம்பிலும் செய்திகளைப் பொறித்து நிலைபெறச் செய்தலையும் மன்னர் முதலியோர் மேற்கொண்டு வந்துள்ளனர்.

## பண்டையோர் தொகுத்த தமிழ்க் கோவை

பண்டை நாளில் நிலவிய தமிழ்ச் சங்கங்கள், நூற் செல்வங்களை, அறிவுக் கருவூலங்களை, ஒருங்கு தொகுத்துப் போற்றும் நோக்கத் துடனேயே தோற்றுவிக்கப்பட்டனபோலும். தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் அங்கங்கே சிதறுண்டு வாழ்ந்த புலவர் பெருமக்களை ஒருங்கு கூட்டி, அவர்களைக்கொண்டு பல்வேறு நூல்களை எழுதுவித்து, புத்தகமே சாலத் தொகுத்து நூலகம் எல்லாம் நிரப்பிப் போற்றும் பணியைப் பண்டைத் தமிழ் மன்னர்கள் செய்து வந்துள்ளனர். சங்கத் தொகை நூல்கள் தொகுக்கப் பெற்ற வரலாறு நமக்கு இதனை நன்கு புலப் படுத்துகிறது.

## சமயச் சார்பில் தமிழ் தழைத்தல்

சமயங்களின் எழுச்சி மிகுந்த காலத்திலே, அவ்வச் சமயத்தார் தத்தம் சமயச் சார்புடைய நூல்களையும் பிறவற்றையும் தேவாலயங்கள், மடாலயங்கள் முதலியவற்றினைக் களமாகக் கொண்டு போற்றி, கல்வி யையும் பரப்பி வந்துள்ளனர். வச்சிர நந்தி என்னும் சமண சமயப்

பெரியாரால் 'திரமிள சங்கம்' எனப் பெயரியதொரு சங்கம் தோற்றுவிக்கப் பெற்றதாக வரலாற்றில் கேட்கப்படுகிறது. மூவர் பாடிய தேவாரத் திருப்பாட்டுகள் தில்லைத் திருக்கோயிலில் ஒரு மேல்மாடத்தில் வைக்கப்பட்டிருந்து பிற்காலத்தில் தேடி எடுக்கப்பட்டது என்று தெரியவருகிறது.

### அரசர்கள் அமைத்த நூலகம்

பல்லவ மன்னர்கள், சோழ மன்னர்கள் இவர்களது ஆட்சிக் காலத்தில் ஆலயங்கள், கல்விக்களமாகவும், நூலகமாகவும் போற்றப் பெற்று வந்தமையும், கல்வியை மன்னர்கள் ஊக்கி வந்தமையும் சாசனவாயிலாகத் தெரிய வருகின்றன. இவர்களைப் போன்றே சேர, பாண்டியர்களும், பிற குறுநில மன்னர்களும் புலவர்களைப் புரந்தும் நூல்களைத் தொகுத்துப் போற்றியும் கல்வியறிவினைப் பரப்பி வந்திருக்கின்றனர். திருக்குறளும், நாலடியாரும் அரசியலின் அங்கமாக முதற்கண் கல்வியைப் பெரிதும் வற்புறுத்திக் கூறியிருத்தல் ஈண்டு நோக்கத்தக்கதாம்.

### புத்தகம் தொகுத்தல்

நூல்களைத் தொகுத்துப் போற்றும் பண்பும், அவற்றை கற்றுத் தெளியும் மாந்தர் மாண்பும் பற்றிய குறிப்புக்கள் இலக்கியங்களில் இலை மறை காய் போல் ஒருசில உள்ளன.

நாலடியாரில் வரும்,

> 'புத்தகமே சாலத் தொகுத்தும், பொருள் தெரியார்,
> உய்த்து, அகம் எல்லாம் நிறைப்பினும், மற்று அவற்றைப்
> போற்றும் புலவரும் வேறே; பொருள் தெரிந்து
> தேற்றும் புலவரும் வேறு.'

என்னும் பாடல் (32:8) புத்தகத்தினைத் தொகுத்து வைத்துப் போற்றும் அக்கால வழக்கத்தினைப் புலப்படுத்துகின்றது.

### நூல்கள் பல மாய்ந்த வகை

இங்ஙனமாக, மன்னர்களாலும், மற்றும் சமய நிலையங்கள் முதலியவற்றாலும் பாதுகாக்கப் பெற்று வந்த தமிழ் நூற் செல்வங்கள் சுமார் கி.பி. பதினைந்காவது நூற்றாண்டு முதல் தக்க பாதுகாப்பு முயற்சி இன்றிச் சிதறுண்டன. அங்கங்கே உள்ள புலவர் பரம்பரையினர் ஒரு சிலரிடமும் சிற்சில மடங்களிடமும் சில பரம்பரைப் பெருமக்களிடமும் நூற்சுவடிகள் ஒதுங்கின. நாளடைவில் இவ்வாறுள்ள நூல்களும் சிதைவுண்டன. முடிவில் ஒருசில பெரும் புலவர் பரம்பரையினர் மட்டுமே நூல்களைப் போதித்தும், சுவடிகளில் பெயர்த்தெழுதியும் ஓரளவு போற்றி வரலாயினர். எனினும், இம் முயற்சி பரவலாக எங்கும் ஒரே வகையில் நிகழ்ந்து வரப் போதிய வசதிகளும் அந்நாளில் வாய்த்திருக்கவில்லை. எண்ணற்ற நூல்கள் தொடர்ந்து போற்றுவாரற்றும், சுவடிகள் பழுதுபட்டும், இறந்துபட நேர்ந்து விட்டன. எத்தனையோ இடையூறுகளுக்குத் தப்பி வந்துள்ள ஏட்டுச் சுவடிகளே சென்ற நூற்றாண்டில் கிட்டின.

### அச்சுப் பொறியும் நூற் படிகளின் பெருக்கமும்

அச்சுப் பொறியின் தோற்றத்தால் பல படிகளை அச்சியற்றும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. புலவர் பெருமக்கள் பலர் பழஞ் சுவடிகளைப் பரிசோதித்து அச்சியற்றும் பதிப்பாசிரியப் பணியை மேற்கொண்டு தத்தமக்குக் கிட்டிய ஏட்டுப் பிரதிகளைப் பதிப்பித்துப் பரப்பி வந்துள்ளனர். பாதிரிமார்கள் தமிழில் உரைநடை நூல்கள் எழுதியும், மொழித் துறை பற்றிய ஆராய்ச்சி நூல்கள் வெளியிட்டும் வந்ததோடு, தமிழில் அகராதிகள் சிலவற்றையும் தோற்றுவித்துள்ளனர். சென்ற நூற்றாண்டிலே சென்னை அரசாங்கம் தமிழ் நூல்களைப் புதிதாக எழுதவும், பழைய நூல்களைப் பதிப்பிக்கவும் தக்கதாகச் "சென்னைக் கல்விச் சங்கம்" ஒன்றை ஏற்படுத்தி, அதன் வாயிலாகவும், புலவர்களை ஊக்கி வந்துள்ளனர். தாண்டவராய முதலியார், திருத்தணிகை விசாகப் பெருமாளையர், வீராசாமிச் செட்டியார், மழவை மகாலிங்கையர் முதலியோர் இச்சங்கத்தின் அங்கத்தினராயிருந்து பற்பல நூல்களை ஆக்கிக் கல்வித் துறைக்கும், இளைஞர் உலகிற்கும் சிறந்த பணி புரிந்துள்ளனர். சிவக் கொழுந்து தேசிகர், சரவணப் பெருமாளையர், வேங்கடாசல முதலியார், ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை, டாக்டர் உ. வே. சாமிநாதையர், மகாவித்வான் ரா. ராகவையங்கார், பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை போன்றார் சிலர் சுவடிகளைத் தேடித் தொகுத்துப் பதிப்புப் பணியும் புரிந்துள்ளனர். ஓரளவு சோழ மன்னர் வழி வந்து, மராட்டிய மன்னர் சரபோஜி (1798-1832) அவர்களால் விரிவுசெய்து நிறுவப்பட்ட தஞ்சைச் சரசுவதி மகால் சுவடி நிலையம், இந்நூற்றாண்டின் தொடக்கத்தில் தோற்றுவிக்கப் பெற்ற மதுரைச் தமிழ்ச் சங்கம், சென்னை அரசாங்கச்சுவடி நிலையம், பல மடாலயங்கள் முதலிய இடங்களில் அங்கங்கே கிடைத்த சுவடிகள் பல பாதுகாக்கப்பட்டு வருகின்றன. மேலை நாடுகளிலே இலண்டன்மாநகர், பாரிசு நகரம், முதலிய இடங்களில் உள்ள நூலகங்களிலும் தமிழ்ச் சுவடிகள் உள்ளனவாகத் தெரியவருகின்றன. திருவனந்தபுரம் அரண்மனை நூலகத்திலும், கேரளப் பல்கலைக் கழகச் சுவடி நிலையத்திலும் தமிழ் ஓலைச் சுவடிகள் உள. சிதம்பரத்தில் உள்ள அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும், திருப்பதி வேங்கடேசுவரப் பல்கலைக் கழகத்திலும் பல தமிழ்ச் சுவடிகள் போற்றப்பட்டு வருகின்றன. கரந்தைத் தமிழ்ச் சங்கம், பவானந்தர் கழகம், போன்ற நிறுவனங்களும் சிற்சில நூல்களைப் பதிப்பிக்கும் பணியை மேற்கொண்டு தொண்டு புரிந்துள்ளன. இவ்வகையில் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம் தொடர்ந்து பல நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றது. சென்னை அரசாங்கச் சுவடி நிலையத்திலும் பல புது நூல்கள் பழஞ் சுவடிகளினின்றும் பதிப்பிக்கப் பெற்று அவ்வப்போது வெளி வருகின்றன.

### இக் காலத்தில் நூலகப் பணி

நூலக எழுச்சியின் காரணமாக, அச்சுப் புத்தகங்களைத் தொகுத்துப் பாதுகாத்து, மக்களிடையே அறிவுச் சுடரைப் பரப்பும் நூலகங்கள் இப்பொழுது பலவாகப் பெருகி வருகின்றன. இந்நிலையங்களில், பல்வேறு கல்வித்துறைகளுக்கும் உரிய பற்பல நூல்களையும் தொகுத்து வைத்து, வேண்டுவார்க்கு வேண்டும் நூல்களை வழங்கி வருகின்றனர்,

ஆயினும், எல்லா நூலகங்களாலும் வெளிவரும் எல்லா நூல்களேயும் வாங்கி நிரப்பி விட முடிவதில்லே. மாவட்ட நூலகங்கள் போன்ற பெரிய நிலேயங்களிலே நூல்கள் பலவாக இடம் பெறுகின்றன. பல்கலேக் கழக நூலகங்கள் இவ்வகையில் மிகப் பெரியவையாகும். சென்னேயி லுள்ள 'கன்னிமாரா பொது நூலகம்', கல்கத்தாவிலுள்ள 'இந்திய தேசிய நூலகம்' ஆகியவை மிக மிகப் பெரிய நிறுவனங்களாகும்.

### நூல்களேத் தொகுக்க இந்திய அரசாங்கம் வகுத்துள்ள புதுச் சட்டம்

நமது பாரத நாட்டு மொழிகளில் எல்லாம் வெளியிடப் பெறும் நூல்கள் யாவற்றையும் ஒருங்கு தொகுத்து வைப்பதற்கு வழி செய்யும் சட்டம் சமீப காலத்தில் ஏற்பட்டுள்ளது. 'டெலிவரி ஆப் புக்ஸ் ஆக்ட்' (Delivery of Books Act) 1956-ல் 99-ஆம் என் திருத்தத் துடன் கூடிய 1954-ஆம் ஆண்டுச் சட்டம் என்பதின் வாயிலாக நான்கு பெரு நூலகங்களில் இந்திய நாட்டில் வெளிவரும் எல்லா நூல்களும் தொகுக்கப் பெறுகின்றன.

### கல்கத்தாவிலுள்ள இந்திய தேசிய நூலகத்தார் புரிந்து வரும் பணி

இவற்றுள் கல்கத்தாவிலுள்ள இந்திய தேசிய நூலகத்தார் தம் நூலகத்தில் தொகுக்கப் பெறும் நூல்களுக்கு, மூன்று மாதங்களுக்கு ஒருமுறை, 1957-ஆம் ஆண்டு இறுதியிலிருந்து, நூல் விவரப் பட்டியல் ( Bibliography ) வெளியிட்டு வருகின்றனர். அந்தப் பட்டியல் பொருள் வகையாக விரித்தும், தொகுத்தும் அமைக்கப் பெறுகிறது. தனிப்பட்டவர்கள், நூல் வெளியீட்டாளர்கள், தனியார் நிறுவனங்கள், மாநில, இந்திய அரசினர் போன்ஞேரால் வெளியிடப் பெறும் நூல்கள் அனேத்தும் அந்தப் பட்டியிலில் இடம் பெறுகின்றன. பாடப் புத்தகங் களுக்கு விளக்கம் தர வந்த வெளியீடுகளும், வணிகரின் விலேப் பட்டியல் களும், தற்காலிகமதிப்புடைய சிறு நூல்களும் (Ephemeral Publications) சேர்க்கப்படுவதில்லே. நம் நாட்டில் மட்டும் அன்றி, வெளிநாடுகளிலும் பயன்படும் சிறந்ததொரு மேற்கோள் நூலாக (Reference work) இருக்க வேண்டும் என்னும் கருத்தால், இந்திய தேசிய நூல் விவரப் பட்டியலே உரோமன் எழுத்தில் அச்சிட்டு வருகின்றனர். தவிரவும், மாநில அரசாங் கங்களின் ஒத்துழைப்புடன், அந்தந்த மாநில மொழி நூல்களே, அவ்வம் மொழியில் வெளியிடவும், தக்க ஏற்பாடு செய்து வருகின்றனர். இம் முயற்சியின் விளேவாக 1958, 1959-ஆம் ஆண்டுகளில் வெளி வந்த தமிழ் நூல்கள் பற்றிய விவரப் பட்டியல் தனித் தனி நூலாகத் தமிழில் வெளி வந்துள்ளன. இவ்வகையில் தொடர்ந்து மேலும் ஒவ்வோர் ஆண்டிற் கும் தமிழ்ப் பகுதிக்குரிய தனி நூல் வெளி வருதல் கூடும். இதனுல் இனிவரும் ஆண்டுகளில் வெளிவரும் தமிழ் நூல்கள் எல்லாவற்றையும் பற்றிய விவரங்களேத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பும், நூல்கள் வேண்டு மேல் நூலகங்களில் பெறும் வசதியும் கிட்டியுள்ளன.

## 1958-க்கு முற்பட்ட தமிழ் நூல்கள் விவரம் அவசியம்

1958-ஆம் ஆண்டிற்கு முற்பட்டு அச்சில் வெளி வந்த தமிழ் நூல்களைப் பற்றிய விவரங்களை அறியவும், அவற்றை ஆராய்ச்சியாளர் பயன்படுத்தும் வகையில் தனி நூலகமாகச் செய்யவும், ஏற்பாடுகள் செய்வது அவசியமாகிறது.

## தமிழே ஆட்சி மொழி

தமிழே நமது மாநிலத்தின் ஆட்சி மொழியாகவும், போதனு மொழியாகவும், அமைந்து, இனி வளர்ச்சி பெற வேண்டும் என்னும் கொள்கையை நமது மாநில அரசாங்கம் மேற்கொண்டுள்ளது. இதற்கு வழிவகை செய்யும் பொருட்டு 1956-ஆம் ஆண்டு ஆட்சி மொழிச் சட்டம் (Madras Official Language Act, 1956) கொண்டு வந்துள்ளனர். 1959-ம் ஆண்டுத் தைத்திங்கள் தொடக்கம் முதல் (சனவரி, 14) அரசாங்க அலுவலகங்கள் சிலவற்றில் தமிழை ஆட்சி மொழியாகப் பயன்படுத்தவும் அரசாங்கம் ஆணை பிறப்பித்துள்ளது. இதன் விளைவாக 'ஆட்சி மொழி அகராதி' முதலியன தொகுத்து வெளியிடும் பணி முதலியனவும் நடைபெற்று வருகின்றன.

## கல்லூரிகளிலே தமிழில் போதனை

1960-61-ஆம் ஆண்டு தொடங்கிக் கல்லூரிகளில் தமிழைப் போதனு மொழியாகக் கொண்டுவரவேண்டும் என்பதற்கு முன்னோடியாக முதன் முதல் கோயமுத்தூர் அரசினர் கலைக் கல்லூரியில் கலைப் பிரிவிலே தமிழில் போதனை தொடங்கவும் தக்க ஏற்பாடுகள் அரசாங்கத்தால் செய்யப் பெற்றுள்ளன. இந்தக் கல்வி ஆண்டில் மேலும் சில கல்லூரிகள் தமிழில் போதிக்க முன் வந்துள்ளன. கலைத்துறையில் பற்பல நூல்களை எழுதுவதற்கு ஊக்கமளித்து, அவ்வத்துறையில் தேர்ந்த பேராசிரியர் பலரைக் கொண்டு நூல்கள் பல எழுதச் செய்து வெளியிட்டும் வருகின்றன. இவ்வகையில் இரண்டு ஆண்டுகளுக்குள் சில நூல்கள் வெளி வந்துள்ளன. இந்நிலை மேலும் மேலும் பெருகி, தமிழில் பற்பல, புத்தம் புதிய கலை நூல்கள் வெளிவந்தவண்ணமாயிருக்கும் என்பது உறுதி.

## ஆராய்ச்சித் துறைக்குத் தனிப்பட அமைந்த தமிழ் நூலகம்

தமிழ் நூல்களுக்கெனத் தனிப்பட்ட பெரு நூலகங்கள் இல்லை. ஆங்கில ஆட்சிக் காலத்தில் நாட்டு மொழிகள் புறக்கணிக்கப்பட்டன. அவற்றின்மீது மக்கள் அத்துணைக் கருத்துக் கொள்ளவில்லை. வயிற்றுப் பிழைப்புக்கு ஆங்கில அறிவு உடனடியாகப் பயன் தந்தமையால் தமிழ் மக்களே தமிழைப் பெரிதும் போற்றிக் கற்கவில்லை. நூலகங்களிலே ஆங்கிலம் முதலிய பிறமொழி நூல்களை வாங்கித் தொகுத்தனரே அன்றி, நாட்டு மொழி நூல்களையும் அவ்வப்போது வாங்கித் தொகுக்க வழி செய்தாரில்லை. பழைய நூலகங்கள் என்று சொல்லப் பெறுவனவற்றில்கூடத் தமிழ் நூல்கள் மிகமிகக் குறைவே. அதிலும்,

பழமையாகவுள்ள நூல்கள் மிகச் சிலவே. சில ஆண்டுகளுக்கு முன் எழுந்த நூல்கள்கூட இந்நாளில் நாம் தேடிக் காணவேண்டும நிலைமையிலே உள்ளன. இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் எவ்வகையான நூல்கள் அச்சியற்றப் பெற்றன என்று அறிவிக்கும் துணை நூல் எதுவும் இப்பொழுது இல்லை. இந்நிலையில் சென்ற நூற்றாண்டில் அச்சில் வெளிவந்த நூல்கள் நமக்குப் புதை பொருளாகவே இருக்கின்றன. தவிரவும், ஓலைச் சுவடிகளையும், காகிதப் பிரதிகளையும் பாதுகாப்பதற்கு நிலையங்கள் இருப்பது போல, தமிழில் வெளியான அச்சு நூல்களை எல்லாம் ஒருங்கே தொகுத்துப் பாதுகாக்கும் நிலையமும் தனியாக ஏற்படவில்லை. இப்பொழுதுள்ள நூலகங்கள் மிகப் பழகிய, சிதிலமான நூற்படிகளை அப்புறப்படுத்தி அழித்துவிடுகின்றன. அவற்றைப் பீடித்துள்ள இராமபாணப்பூச்சி முதலியவற்றால் பிற நூல்களுக்கு ஊறு நேராவண்ணம் காக்க இம்முறை உதவுகிறது. ஆயினும், பிற இடங்களில் கிடைத்தற்கு அரியவான நூல்களாக இருப்பின், அவற்றைப் படியெடுத்து வைத்துக் கொண்டோ அல்லது படம் பிடித்து வைத்துக் கொண்டோ, அதன் பின்னர் அவற்றை அப்புறப்படுத்தி அழித்தல் நலமாகும். எவ்வகைப்பட்ட நூல்களாயினும் அவற்றையெல்லாம் சிறிதும் அழியவிடாது, தக்க வண்ணம் போற்றிப் பாதுகாக்கும் நிலையில் உள்ள ஒரு நூலகமே, இன்றும் என்றும், ஆராய்ச்சியாளருக்குப் பயன்படுவதாகும். மேலும், தமிழில் உள்ள கல்வெட்டு வெளியீடுகள், இதுவரை வெளிவாராத பழங்குறிப்புக்கள், ஆனந்தரங்கம் பிள்ளையின் நாட்குறிப்பு[1] போன்ற சரிதக் குறிப்புக்கள், முதலியார் ஓலைகள்[2] போன்றுள்ள அரசாங்க ஆணைகள், பழங்கால மன்னர்கள் பொதுமக்களுக்குத் தெரிவித்த அறிவிப்புக்கள் முதலியவற்றையும் இந்நூலகத்தே இடம்பெறச் செய்தல் நலமாகும். தமிழில் உள்ள நூல்களோடு தமிழைப் பற்றி ஆங்கிலம் முதலிய பிற மொழிகளில் வெளிவந்துள்ள நூல்களையும் இணைத்தல் ஆராய்ச்சித் துறைக்கு அவசியமே. தமிழ் நூல்களின் பிறமொழி பெயர்ப்புக்கள், தமிழோடு இயைபுள்ள அகராதிகள், வேறு துணை நூல்கள் ஆகியவற்றையும் ஆராய்ச்சித் துறைக்கு என அமைக்கும் நூலகத்தில் சேர்த்து வைத்தல் பெரும்பயன் தருவதாகும்.

### அரசாங்க முயற்சி—தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றம்

இங்ஙனமாகத் தமிழை மேலும் வளப்படுத்துவது அவசியமெனக் கருதி இதற்கு முன் வெளிவந்த நூல்களையும் ஓர் இடத்தில் தொகுத்துப் போற்றும் பணியை அரசாங்கம் மேற்கொண்டுள்ளது. மொழித்துறையிலும், கலைத்துறையிலும் இன்னும் பல துறைகளிலும் உழைப்போர்க்குப்

---

[1] இக் குறிப்புக்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பெற்று முன்பே வெளியாகியுள்ளன. மூலப்படியாகிய தமிழிலும் ஒரு பகுதி இப்பொழுது வெளியாகியிருக்கிறது.

[2] இப்பொழுது கன்னியாகுமரி மாவட்டத்தின் ஒரு பகுதியாயும், முன்பு திருவிதாங்கூர் இராச்சியத்தின் ஒரு பாகமாகவும் உள்ள நாஞ்சில் நாட்டில், திருவிதாங்கூர் மன்னரின் பிரதிநிதியாய் முன்பு ஆட்சிப்பணி புரிந்த அழகிய பாண்டியபுரம் பெரிய வீட்டு முதலியாரின் இல்லத்திலிருந்து கிடைக்கப்பெற்ற ஓலைப் பிரமாணங்களே இவை. இவற்றைக் கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆராய்ந்து அச்சியற்றியுள்ளார்,

பயன்படும் வகையில் இதற்கு முன் வெளிவந்த நூல்களையும் ஒருங்கு தொகுத்து வைக்கச் சென்னை அரசினர் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தின் வாயிலாகத் தக்க முயற்சி செய்து வருகின்றனர்.

### 1867-ஆம் ஆண்டுச் சட்டப்படி பதிவு செய்யப்பெற்ற நூல்கள்

இம்முயற்சியின் முதற்படியாக, நூல் உரிமையாளர்கள் தத்தம் உரிமையைப் பாதுகாக்கும் வண்ணம் அரசாங்கத்தில் பதிவு செய்துள்ள நூல்களின் விவரங்களைத் தொகுக்கும் முயற்சி மேற்கொள்ளப் பெற்றிருக்கிறது. 1867-ஆம் ஆண்டில் நூல் உரிமையைப் பதிவு செய்வதற்குரிய சட்டத்தை இந்திய அரசாங்கம் இயற்றியது.[1] இதன் பின் புத்தக உரிமையைப் பாதுகாக்கும் பொருட்டு நூல் ஆசிரியர், வெளியிட்டாளர் ஆகியோர் தமது நூல்களை அரசாங்கத்தில் பதிவு செய்து வந்துள்ளனர். 1867-ஆம் ஆண்டின் பிற்பகுதி தொடங்கி ஒவ்வோர் ஆண்டும் பற்பல நூல்கள் உரிமையைக் காக்கப் பதிவு செய்யப்பெற்றன; பதிவு செய்யப் பெற்ற நூலின் பிரதியும் சட்டத்தில் கண்டவாறு பதிவாளருக்கு வரலாயின. இங்ஙனமாக வந்த நூற்படிகள் அரசாங்கத்தின் 'சென்னை ஆவணக் களரி' நூலகத்தில் (Madras Record Office-Library Section) கொண்டுவந்து சேர்க்கப்பெற்றன. இவ்வகையில் சென்னை மாநிலத்தில் அச்சிடப் பெற்றுப் பதிவு செய்யப் பெற்ற பல்வேறு மொழி நூல்களும் அந்நூலகத்தின்கண் உள. உரிமை பதிவு செய்யப் பெற்ற நூல்கள் பற்றிய குறிப்புக்களை அரசு இதழில் ( Gazette ) மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வெளியிட்டும் வந்துள்ளனர்.

### தமிழ் நூல் விவர அட்டவணை

பதிவு செய்யப் பெற்ற பல் மொழி நூல்களுள்ளும் தமிழ் நூல்களை மட்டும் தனியே பிரித்து நூல் விவரம் எழுதித் தொகுக்கும் பணி 1960-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் தொடங்கப் பெற்றது. முதன் முதல் 1867-ஆம் ஆண்டு தொடங்கி 1900 வரையில் பதிவு செய்யப் பெற்ற நூல் விவரங்களை முதல் தொகுதியாக வெளியிடுவது என்று தீர்மானிக்கப் பெற்றது. இக்காலப் பகுதியில் உள்ள நூல்களின் விவரங்களை ஒரே தொகுதியாக அமைப்பதாயின் நூல் மிகமிக விரிந்துவிடும். அன்றியும், அது எடுத்துப் படித்துப் பயன்படுத்துவதற்கு எளிதாகவும் இராது. ஆகவே, முதல் தொகுதியைப் பகுதிபகுதியாகப் பிரித்து வெளியிடுவதே நலம் எனக் கொள்ளப் பெற்றது. தொடர்ந்து அச்சாகிவரும் தமிழ் நூல் விவர அட்டவணை முதல் தொகுதியின் முதல் பகுதி இந் நூல்.

### அட்டவணையின் அமைப்பு

இந்நூல் விவர அட்டவணை மூன்று பகுதிகளாக அமைந்துள்ளது. இவற்றுள் ஒன்று நூல் விவரம் தெரிவிக்கும் பொருட் பகுதி. இதுவே நூலின் பெரும் பகுதி. இதன் பின், ஆசிரியர் அகர வரிசை, நூல் அகர வரிசை என்னும் இரண்டு அகராதி வரிசைப் பட்டியல்கள் அமைக்கப் பெறும். ஒவ்வொரு தொகுதியின் முடிவிலும் இவை சேர்க்கப்பெறும்.

---

[1] 1867-ஆம் ஆண்டு XXV-ஆம் எண் சட்டம் (Books Registration Act, 1867.)

## தொகுப்பு முறை

பொருட் பகுதியில் நூல்கள் பொருளுக்குத் தக்கவண்ணம் டியூவி தசாம்ச முறையில் ( Dewey Decimal Classification ) அடைவு படுத்தப்பட்டுள்ளன. பொருளின் தலைப்புக்களோடு கொடுக்கப்பட்டுள்ள எண்கள் டியூவி தசாம்ச முறை எண்கள். டியூவி எண் ஒரு நூலின் உட்பொருளை (Specific Subject) திட்டவட்டமாகக் குறிக்க முடியாத நிலையில் உள்ள இடங்களில் அந்த எண்ணுடன் பகர வளைவுக்குள் (Square brackets) ஒன்று என்னும் [1] எண் உடன் அமைக்கப் பெற்றிருக்கும் (பக்கம் 2, 11, 38, முதலியவற்றில் காணலாம்). இந்திய தேசிய நூல் விவரப்பட்டியலில் மேற்கொள்ளப்பெற்ற முறையும் இதுவேயாகும். வேறு சில பகுதிகளுக்கும் அந்தப் பட்டியலில் காணும் எண்களே இதிலும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, இலக்கியப் பகுதியில் தந்துள்ள எண்களைக் கூறலாம். மேலும், அமைப்பு முறை முதலியவற்றிலும் இந்தத் தேசிய நூல் விவரப் பட்டியலே இவ்வட்டவணைக்கு முன்மாதிரியாகக் கொள்ளப் பெற்றது.

## பொருட் பாகுபாடு

பொருட் பாகுபாட்டில் டியூவியைப் பின்பற்றிய போதிலும், சிற்சில இடங்களில் தமிழ் நூல்களுக்கு இயைய மேலும் சில உட்பாகுபாடுகள் கொள்ளவேண்டியதாயிற்று. உதாரணமாக, ஓர் இடத்தை நோக்குவோம். தமிழ்க் கவிதை என்னும் பகுதியில் இலக்கிய நூல்கள் எல்லாம் டியூவி முறையில் அமைந்து விடுகின்றன. இவ்வகையில் இலக்கிய நூல்களை எல்லாம் ஒரு சேரக் கொடுத்தால், அதன் வகைகளைப் பகுத்துணர இயலாது போகும். எனவே, இலக்கியப் பகுதியில் திரு. எஸ் ஆர். ரங்கநாதன் அவர்களின் அமைப்பு முறையை ஒட்டி, இலக்கிய வாலாற்றுக் கண்ணோட்டத்தில் பாகுபாடு செய்யலாயிற்று. இவ்வகையில் பொருட் பாகுபாடு மேற்கொண்டது பொருட் கூறுகளைத் தெளிவுபடப் புலப்படுத்த வேண்டும் என்பதற்கேயாம். இன்னும் இப் பொருட் பகுதியில் சிறுசிறு உட்பிரிவுப் பகுதிகளும் தெளிவுற விளங்கும் வகையில் பல கூறுபடுத்திப் பாகுபாடு செய்யப் பெற்றிருக்கின்றன. எடுத்துக்காட்டாக அறநூல் பற்றிய பகுதியை எடுத்துக் கொள்வோம். இதில், பொது அற நூல்கள்-கவிதை, பொது அற நூல்கள்-உரைநடை, குழந்தைகட்கான நூல்கள், சதகங்கள், திரட்டு நூல்கள், திருக்குறள் வெண்பாக்கள், மனுநீதி நூல் முதலியனவாகப் பாகுபாடு செய்திருத்தல் காணலாம்.

## நூலாசிரியரும் நூல் வரிசையும்

ஒவ்வொரு பொருட் பகுதியிலும் நூலாசிரியரின் பெயர் அகர வரிசையில், அந்தந்த ஆசிரியரின் நூல்கள் அடைவுபடுத்தப்பட்டுள்ளன. ஒரு குறிப்பிட்ட பொருளின் கீழ் ஓர் ஆசிரியரால் இயற்றப்பெற்ற நூல்கள் ஒன்றுக்கு மேற்பட்டிருப்பின், அந்த நூல்களுக்குள் அகர வரிசை மேற்கொள்ளப்பட்டுள்ளது (பக்கம் 2, 51 முதலியவற்றில் காணலாம்).

மேலும், ஒரு நூலுக்கே ஒன்றுக்கு மேற்பட்ட பதிப்புப் படிகள் உள்ள இடத்து, நூல் வெளிவந்த ஆண்டு எண், காலாண்டுக் uarter) குறிப்பு எண் முதலியவற்றின் அடைவில் அவை கொள்ளப்பெற்றன (பக்கம் 19, 93 முதலியவற்றில் பார்க்கலாம்). எனவே, ஓர் ஆசிரியர் பெயரின் கீழ் ஒரு பொருள் பற்றிப் பல நூல்வரின் நூல் அகர வரிசையும், ஒரு நூலுக்குப் பல பதிப்புக்கள் இருப்பின் கால வரிசையும் இந்தத் தொகுப்பில் மேற்கொள்ளப்பெற்றிருத்தல் காணலாம். பாடப் புத்தகத் தொகுப்பில் பாடநூல்கள் ஒன்று, இரண்டு, மூன்று என்னும் வகுப்பு எண் வரிசையில் கொடுக்கப்பெருது, ஏனைய இடங்களிற் போலப் பாடப் புத்தகப் பெயர் அகரவரிசையிலேயே முறைப் படுத்தப் பெற்றிருக்கிறது. இதனுல் ஆறு, இரண்டு, ஐந்து, நான்கு, முதல், மூன்று என்னும் மொழி முதல் எழுத்து வரிசையில் பாடப் புத்தகங்கள் மாறி அமைந்திருக்கும். ஒரு நூலே ஒன்றுக்கு மேற்பட்ட பெயர்களுடன் காணப்பட்ட இடத்தும் கால வரிசையே மேற்கொள்ளப்பெற்றது. இம் மாதிரி இடங்களில் அகராதி வரிசை பிழைத்துள்ளது போலக் காணப் பெறும். மூதுரை, வாக்குண்டாம் என்பனவும்--திருவேங்கட சதகம், மணவாளநாராயண சதகம் என்பனவும்—சகல கலாவல்லி மாலே, சரசுவதி தோத்திரம் என்பனவும் ஒவ்வொரு நூலேயே குறிப்பனவாகும். இங்கெல்லாம் கால வரிசை மேற்கொள்ளப் பெற்றிருத்தல் காணலாம். இது போன்ற இடங்கள் வேறு சிலவும் உள.

### ஆசிரியர் பெயர் அறிய இயலாத நூல்கள்

ஆசிரியர் பெயர் தெரியா நூல்கள், அவ்வப் பொருட்பாகுபாட்டில், ஆசிரியர் பெயர் அகர வரிசையின் அடைவில் உரிய இடங்களில் இணைக்கப் பெற்றுள்ளன (பக்கம் 1, 6, 11, முதலிய இடங்களில் பார்க்கவும்). மேலும், இத்தகைய நூல் தலைப்புக்கள் ஆசிரியர் பெயரைப் போலத் தடித்த எழுத்திலும் அமைக்கப் பெற்றுள்ளன. எனவே, நூற் பெயருக்குத் தரப்பட்டுள்ள வேறுபட்ட எழுத்துக்களினுல் இவை ஆசிரியர் பெயர் அறிய இயலாதவை என்பது தெற்றென உணரலாகும்.

### நூல் விவர அட்டவணைகளில் விவரம் தந்துள்ள முறை

இனி, ஆசிரியர் பெயரை அடுத்து ஒவ்வொரு நூலுக்கும் தரப்பெற்றுள்ள விவரக் குறிப்புக்களைக் கவனிப்போம். பொருளைக் குறிக்கும் டியூவி பகுப்பு எண்ணும், ஆசிரியர் பெயரும் நூலுக்கு முன்னர் அமைந்திருக்கும். பின், நூலின் பெயர் (அதாவது முழுத் தலைப்பு), பதிப்பாசிரியர், பதிப்பக விவரம், வெளியிட்ட ஊர்ப் பெயர், நூல் வெளியிடப் பெற்ற ஆண்டு, நூலின் உள்ளடக்கத்தைக் குறிக்கும் பக்கங்கள், நூலின் உருவ அளவு, நூல் கட்டுமானத் தன்மை ( Type of binding ) விலை ஆகிய விவரங்கள் முறையே தரப்பெறும். மேலும், படங்கள் உளவேல் அவை பற்றிய குறிப்பும், நூல் வெளியீட்டு வரிசை தெரியவரின் அது பற்றிய குறிப்பும் கொடுக்கப்பெறும். இறுதியாக அவசியம் வேண்டும் நூல்களுக்குப் பொருளின் சுருக்கம் முதலியனவும் சுட்டப்பெறும். மேற்குறித்த இவ்விவரங்கள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்ருகத்

தொடர்ந்து அமைந்திருக்கும். இவற்றினிடையே பிரிவினையை அரைப் புள்ளி, மூற்றுப்புள்ளி ஆகிய குறியீடுகளே காட்டி நிற்கும். இவையே நூல் விவர அட்டவணைகளில் (Bibliography) காணப்பெறும் பொதுமை யாகும்.

### தமிழ் நூல் விவர அட்டவணையில் சில புதிய அம்சங்கள்

இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணையும், மேற்குறித்த அம்சங்கள் எல்லாவற்றையும் கொண்டுள்ளது. ஆயினும், நூலக விஞ்ஞான முறை தெரிந்தாரும் ஏனையோரும், எத்தகைய நிலையில் உள்ளாரும் எளிதாக விவரக் குறிப்புக்களைக் கண்டு கொள்ளும் வகையில் ஒருசில மாறுதல் களை, அதாவது புதிய அம்சங்களை, மேற்கொண்டுள்ளது. நூற்பெயர், பதிப்பாசிரியர், ஆண்டு விவரம் ஆகிய ஒவ்வொன்றினையும் சிறிய உரோமன் எண் இட்டுப் பிரித்துக் காட்டியிருப்பது ஒன்று. மற்றொன்று தொடர் எண். எண் இட்டுச் செய்திகளைப் பிரித்துக் காட்டியிருப்பத னல், ஒன்றோடு ஒன்று மயங்காது, சந்தேகத்திற்குச் சிறிதும் இடம் இன்றி, அவ்வச் செய்திகளை அறிதல் கூடும். சாதாரணமாக நூல் விவரப்பட்டியல்களில் எத்தனை நூல்களுக்கு விவரங்கள் உள்ளன என்று பார்க்க அவற்றை எண்ணிக் கணக்கிட வேண்டியே உள்ளது. ஆனல், இந்த நூல் விவர அட்டவணையில் தொடர் எண் குறித்திருப்பது இதன் கண் உள்ளடங்கிய நூற்பிரதிகளின் எண்ணிக்கையை அறிய உதவுகிறது. அன்றியும், அகராதிகளுக்குப் பயன்படுத்தவும், இத்தொடர் எண்கள் பயன்படுவன ஆகும். விவரப் பட்டியல்களில் நூல், ஆசிரியர் அகராதி களுக்குக் குறிப்பு எண் கொடுக்கும்போது, பொருட் குறிப்பு எண்ணி னையே சுட்டுகின்றனர். இக்குறிப்பு நூலக விஞ்ஞானம் அறிந்தார்க்கே எளிதில் பயன்படும். மற்றையோர் இவ்வகைக் குறிப்பைக் கொண்டு விரும்பிய அளவில், தாமே நூல், ஆசிரியர் விவரங்களை எளிதல் கான இயலாது. மேலும், ஒரு பொருட் கூறுபாட்டில் பல நூல்கள் இருப் பின், அந்தப் பொருட்பகுதியில் அகரவரிசை நோக்கித் தேடியே உரிய இடம் காணுதல் வேண்டும். இத்தகைய நிலையை நீக்கி, எல்லாரும் எளிதில் கண்டு கொள்ளும் பொருட்டாகவே, இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணையில் தரப்பெறும் அகராதிகளில் தொடர் எண் கொடுக்கப் பெறுகிறது.

### நூலின் கட்டுமானக் குறிப்பு கொடுக்கப்படாமை

நூலின் கட்டுமானத்தைப் பற்றிய குறிப்பு இந்த அட்டவணையில் தரப் பெறவில்லை. பழைய நூற்பிரதிகளில் சாதாரண மெல்லிய காகித மேலட்டைகளை உடையனவே பெரும்பாலன. எஞ்சிய நூல்கள் கெட்டி யான காகித அட்டை உடையன. துணிக் கட்டு நூல்கள் மிகமிகக் குறைவு. மேலும், இவைகளில் பலவும் கட்டுவிட்டும், அட்டைகள் ஒடிந்தும் பொடிந்தும் உள்ளன. இவற்றுள் பலவற்றை மீண்டும் கட்டு மானம் செய்தும், வேறு பிற வகைகளில் நூல் பொடியாமல் காப்பளித் தும், மிகவும் சிதிலமானவற்றைப் படி எடுத்தும் பாதுகாக்க வேண்டி யுள்ளது. ஆகவேதான் கட்டுமானம் பற்றிய குறிப்பு மட்டும் நீக்கப் பெற்றது.

இந்நூல் விவர அட்டவணைப் பகுதியில் தந்துள்ள குறிப்பு விவரங் களை இனி முறையே நோக்குவோம்.

## ஆசிரியர் குறிப்பு

ஆசிரியர் பெயர் தடித்த எழுத்தில் முதற்கண் தனிப்பட இடப்பக்க ஓரத்தை ஒட்டி அமைந்திருக்கும். ஆசிரியரின் தகப்பனார் பெயர் முதலியன தெரியவரின், ஆசிரியர் பெயரின் ஈற்றில் காற்புள்ளி (Comma) இட்டு, தலைக் குறிப்பு எழுத்தைக் கொடுத்து, முற்றுப் புள்ளி (Full stop) தரப்பெற்றிருக்கும். ஊர்ப்பெயரும் தெரிய வருமாயின், மேலும் காற்புள்ளி இட்டு ஊர்ப்பெயரை அமைத்து, ஈற்றில் முற்றுப் புள்ளி இடப் பெற்றிருக்கும். ஒருசில இடங்களில் ஒரே பெயரில் வரும் இரண்டு ஆசிரியர்களை வேறு பிரித்துக் காட்டும் பொருட்டு, ஆசிரியரின் தந்தை பெயர் முழுமையும் கொடுக்கப் பெற்றிருக்கிறது. ஆசிரியர் பெய ரோடு வரும் இத்தகைய குறிப்புக்களும் தடித்த எழுத்தில் அமைக்கப் பெற்றிருத்தல் காணலாம்.

## மொழிபெயர்ப்பாசிரியர், தொகுப்பாசிரியர் விவரம் அமைந்துள்ள வகை

மொழிபெயர்ப்பாசிரியர், தொகுப்பாசிரியர் பற்றிய விவரமும் ஆசிரியர் பெயரை அடுத்துக் குறிப்பு எழுத்துக்களினால் புலப்படுத்தப் பட்டுள்ளது. ஆசிரியர் பெயரின் பின் சிறுகோடு ( Dash ) இட்டு, மொ.து. என்னும் குறிப்பினால் மொழிபெயர்த்தது என்பதும், இங்ஙனமே ஆசிரியர் பெயரின் பின்னர்ச் சிறுகோடு இட்டுத் தொ.து. என்னும் குறிப்பினால் தொகுத்தது என்பதும் குறிக்கப்பட்டுள்ளன. சங்கராசாரியரின் நூல் களும் (தத்துவப் பகுதி) விவேகானந்தரின் நூல்களும் மட்டும் அவ்விரு மூல நூல் ஆசிரியர் பெயரிலேயே தரப்பட்டுள்ளன. ஏனைய இடங்களில் மொழி பெயர்ப்பாசிரியரையே ஆசிரியராகக் குறித்து, மொ.து. என்னும் குறிப்பினால் மொழி பெயர்ப்பாசிரியர் என்பதும் தெரிவிக்கப் பெற்றி ருக்கும். விளக்கப் பகுதியில் மூல நூல் பற்றியும் மூல நூல் ஆசிரியரைப் பற்றியும் உள்ள குறிப்புக்கள் தெளிவாகத் தெரியவந்த நூல்களுக்குக் கொடுக்கப் பெற்றிருக்கும்.

ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர் ஒரு நூலை ஆக்கியிருப்பின், இடையே அண்ட் (&) என்னும் குறியீடு இட்டுக் காட்டப்பெற்றிருக்கிறது.

## நூலின் பெயர்

நூலின் பெயர் அவ்வந் நூல்களில் காணப்பெறும் எழுத்து வடிவம் மாறாமல் அவ்வவ்வற்றில் உள்ளவாறே முதற்கண் கொடுக்கப்பெற்றி ருக்கும். முதற் பதிப்பு, இரண்டாம் பதிப்பு என்பன போன்ற பதிப்பு விவரம் தெரியவரும் நூலுக்கு மட்டும் நூற்பெயரை அடுத்து அப்பதிப்பு விவரமும் அமைக்கப் பெற்றிருக்கும். தொடர் எண் நூற்பெயரின் தொடக்கத்தில் இடம் பெறுகிறது.

ஒரு நூலோடு வேறு சில நூல்கள் உடன் அமைந்திருந்தால், அந் நூல்களின் பெயர்கள் பகர வளைவுக்குள் ( Square Brackets ) தரப் பெற்றிருக்கும். ஒரு தொகுதியில் பல நூல்கள் இருப்பின் அவற்றுள் முதலில் இடம் பெற்றுள்ள நூலுக்கே தொடர் எண் இடப்பெற்றிருக்கும். அன்றியும், எல்லா நூல்களும் ஒரு பொதுத் தலைப்பின் கீழ் அமைந்திருப் பின், (குமர குருபரர் பிரபந்தத் திரட்டு, சைவ சித்தாந்த சாத்திரம், சோடசப் பிரபந்தம் என்றாற் போல) அப்பொழுது பொதுத் தலைப் பிற்கே தொடர் எண் குறிக்கப்பெறும்.

ஏனைய நூல்களுக்கும், பதிப்பு விவரம் முதலியன எல்லாம் பொருட் பாகுபாட்டில் அவ்வவற்றிற்குரிய இடங்களில் கொடுக்கப்பட்டிருக்கும். ஆனால், அவற்றிற்குத் தொடர் எண் முதற்கண் தரப்பெறுதல் இல்லை. நூற்பெயரை அடுத்து, எந்த ஒரு நூலோடு பிறிதொரு நூல் சேர்ந்து அமைந்துள்ளதோ, அந்த நூலின் தொடர் எண்ணில் இந்த நூலினைக் காணுதல் வேண்டும் என்பதைக் குறிக்கும்பொருட்டுப் பிறை வளைவுக் குறிகளுக்குள் (தொடர் எண் . . . பார்க்க) என்னும் குறிப்பு கொடுக்கப் பெற்றிருக்கும். தொடர் எண் என்பது சுருக்கமாகத் தொ.எ. என்று சுட்டப்பெற்றிருக்கும்.

ஒருசில இடங்களில் பல நூல் சேர்ந்துள்ள தொகுதிகளிலே முதலில் இடம் பெற்றுள்ள நூல்கள் இந்த நூல் விவர அட்டவணையின் பிற்பகுதி யில் இடம் பெறுகின்றன. ஆகவே, அவற்றிற்குரிய தொடர் எண்ணை இப்பொழுது உறுதி செய்யக்கூடவில்லை. இங்ஙனம் தொடர் எண் இப் பொழுது கொடுக்க முடியாத நூல் தொகுதிகளுக்கு, அந்நூற் பெயர்களையே தந்து, அவற்றைப் பார்க்க என்று ஒரு சில இடங்களில் கொடுக்கப்பெற்றிருக்கிறது. இவற்றை இம் முதல் தொகுதியின் இறுதி யில் அமைக்கப்பெறும் நூற்பெயர் அகரவரிசையால் கண்டு கொள்ளலாம். ஆயினும், இப்பொழுது தொடர் எண் குறிப்பு கொடுக்க இயலாத வற்றிற்கு இம் முதல் தொகுதியின் இறுதியில் ஓர் அட்டவணை மூலம் தொடர் எண் குறிப்புக்களும் தனியாகச் சேர்க்கப்பெறும்.

## பதிப்பாசிரியரின் பெயரும் பதிப்பகமும்

பதிப்பாசிரியர் பெயருடன் அவர்தம் ஊர்ப் பெயரும் தெரிய வந்தன வற்றிற்கு ஆசிரியர் பெயரில் போலக் காற்புள்ளி இட்டு ஊர்ப் பெயர் கொடுக்கப் பெற்றிருக்கிறது. ஆனால், பதிப்பாசிரியரின் தந்தை பெயரைச் சுட்டும் தலைக்குறிப்பு எழுத்து பதிப்பாசிரியர் பெயரின் முன்னரேயே அமைக்கப் பெற்றிருக்கிறது. இன்று காணும் பற்பல நூல் வெளியீட்டகங்களைப் போன்ற பதிப்பகங்கள் சென்ற நூற்றாண்டில் மிகமிகக் குறைவு. வெளியீட்டகங்களின் நிலையில் தொண்டு புரிந்து வந்தனவை அச்சகங்களாகும். எனவே, அச்சகப் பெயரும் அது நிலை பெற்றிருந்த ஊர்ப் பெயரும் தரப்பட்டுள்ளன. பதிப்பாசிரியரையும் அச்சகங்களையும் வேறு பிரித்துக் காட்ட அரைப்புள்ளி (Semi Colon) அமைத்திருக்கிறது. ஒன்றுக்கு மேற்பட்ட பதிப்பாசிரியர்கள் பதிப்பகப் பெயர்கள் வரும் இடங்களில் அண்ட் (&) என்னும் குறியீடு இடப் பெற்றிருக்கிறது.

சிற்சில நூல்களில் அச்சகங்களின் ஊர்ப் பெயர் குறிக்கப்படாமல் இருந்தமையின், அட்டவணைப் பொருட் பகுதியிலும் அங்கங்கே சிற்சில இடங்களில் விடுபட்டுப் போயிருக்கிறது. ஆனால், வேறு நூல்களில் அந்த அச்சகம் இருந்த ஊரின் பெயர் தெளிவாகவும் தெரிய வருகிறது. எனவே, பொதுவாகச் சென்ற நூற்றாண்டில் நிலவிய அச்சகங்களின் அட்டவணை ஒன்றும் ஊர்ப் பெயரோடு முதல் தொகுதியின் ஈற்றில் ஒரு தனிச் சேர்க்கையாக இணைக்கப்பெறும். இதனால் எல்லா அச்சகங்களைக் குறித்தும் நன்கு உணர இயலும்.

## நூல் பதிப்பித்த ஆண்டு

ஆண்டுக் குறிப்புடன் மாதப் பெயர் தெரிய வந்த நூல்களுக்கு மாதப் பெயரும் உடன் கொடுக்கப் பெற்றிருக்கிறது. மாதப் பெயரை முதலில் சுட்டி, அடுத்துக் காற்புள்ளி இட்டு, ஆண்டு எண் அமைக்கப் பெற்றிருக்கிறது.

பற்பல நூல்களில் ஆங்கில ஆண்டு எண் குறிக்கப் பெறவில்லை. அதற்குப் பிரதியாகத் தமிழ் ஆண்டுப் பெயர், மாதப் பெயர்களும், இசுலாமியர் அச்சியற்றிய நூல்களில் ஹிஜிரா ஆண்டு எண், மாதப் பெயர்களுமே பெரும்பாலும் காணப்பெற்றன. தமிழ் ஆண்டு, ஹிஜிரா ஆண்டுகளுக்குச் சரியான ஆங்கில ஆண்டு எண்களைக் கண்டு* எல்லா நூல்களுக்கும் ஆங்கில ஆண்டே இப்பொழுது கொடுக்கப் பெற்றிருக் கிறது. எந்த வகையான காலக் குறிப்பும் இல்லாமலும் சிற்சில நூல்கள் இருந்தன. இத்தகைய நூல்களுக்கு அவற்றைப் பதிவு செய்யப்பெற்ற ஆண்டு எண்ணையே பதிப்பித்த ஆண்டாகவும் கொண்டு இந்த பகுதி நிரப்பப் பெற்றிருக்கிறது.

## நூலின் அளவு

பெரும்பாலும் ஒரு நூலின் பக்க அளவையே நூல் விவர அட்டவணை களில் குறிப்பிடுவது வழக்கம். ஆனால், இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணையில் இடம் பெறும் நூல்களில் பலவும் செய்யுள் நூல்கள். இன்னும் பல செய்யுளும் உரைநடையும் கலந்து அமைந்தவை. மற்றும் பல நூல்கள் செய்யுளும், அவற்றிற்குரிய உரையுமாக அமைந்தவை. செய்யுள் நூல்களுக்குப் பாடல் எண் குறித்தால் அந்த நூலின் தகுதியைச் சிறப்புற அறிதலும் கூடும். ஆகவே, மேற்குறித்த இயல்புகள் யாவற்றையும் குறிக்கும் வகையில் குறிப்பு எழுத்துக்களுடன் எண்கள் இப்பகுதியில் தரப்பெற்றிருக்கின்றன.

செய்யுள் எண்ணிக்கை, நூலின் பக்க எண் முதலியவற்றில் நூலுக்குப் புறம்பாக முன்னே தனிப்படக் கொடுக்கப் பெற்றுள்ள பாயிரப் பகுதி முதலியனவும், பிற்சேர்க்கையாக உள்ள பகுதிகளும் தனிப்படக் காட்டப் பெற்றிருக்கின்றன. இவற்றைப் பிரித்துக் காட்ட இவற்றினிடையே கூட்டல் குறி பயன்படுத்தப் பெற்றிருக்கிறது.

---

* தமிழ், ஹிஜிரா ஆண்டுகளுக்கு நேரான ஆங்கில ஆண்டு எண்களை கண்டு கொள்ள உதவியாக இருந்த நூல் L. D. சாமிகண்ணுப் பிள்ளை என்பார் எழுதிய 'Indian Ephemeris' என்பதாகும்.

### நூலின் வடிவ அளவு

நூலின் வடிவ அளவைக் காட்டுவதற்கு நூலின் நீளம் ஒன்றனையே இப்பொழுதுள்ள விவரப்பட்டியல்களில் கொடுத்து வருகின்றனர். இக்காலத்தில் நூல் வடிவங்கள் ஒருவகையில் நிலைபெற்று வழங்குவதனால் நீளத்தைக் கொண்டே அதன் அகலமும் எளிதில் உணர வகையுண்டு. ஆனால், சென்ற நூற்றாண்டில் வெளிவந்த நூல்களோ பல்வேறு வகையான வடிவங்களை உடையன. ஆகவே, நூல்களுக்கு நீளம், அகலம் என்னும் இரண்டு அளவுகளும் இந்த அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளன. நீள, அகல அளவுகளின் இடையே பெருக்கல் குறியிட்டு இடப்பெற்றிருக்கும். இதில் வரும் செ.மீ. என்னும் குறிப்பு சென்டி-மீட்டர் என்பதன் சுருக்கமாகும்.

### விலை

விலை சுட்டப்பெற்றுள்ள நூல்களுக்கு மட்டுமே குறிக்கப்பெற்றிருக்கும். முன்பு ரூபாய், அணா, பைசா வழக்கிலிருந்த காலமாதலின், நூல்களில் குறித்தபடி ரூபாய், அணா, பைசாக்களிலேயே இப்பகுதி சுட்டப்பெற்றிருக்கும். ரூபாய், அணா, பைசாக்கள் இணைகோடு (Hyphen) இட்டுப் பிரித்துக் காட்டப்பட்டிருக்கும்.

### விளக்கம்

நூல் விவர அட்டவணையில் விளக்கப் பகுதி மிக முக்கியமானதோர் அம்சம் ஆகும். விளக்கம் இன்றியமையாது வேண்டும் பெரும்பான்மை நூல்களுக்கும், சுருக்கமாக எழுதப் பெற்றிருக்கிறது. நூற்பொருள் பற்றிய சிறு குறிப்பே பெரும்பாலும் தரப்பட்டிருக்கும். உரைநடை நூல்களில் கட்டுரை, கதை முதலியவற்றின் எண்ணிக்கை, பெரு நூல்களில் அத்தியாயம் முதலிய தனிப் பாகுபாடுகள் முதலியனவும், செய்யுள் நூல்களில் காண்டம், படலம், சருக்கம் முதலிய பெரும் பிரிவுகளும் சுட்டப்பெற்றிருக்கும். நூல் எழுதுவதற்கு ஆதாரமான மூல நூல்கள், மொழி பெயர்ப்பு விவரம் முதலியவை, நூலின் உரைகாரர்பற்றிய குறிப்புக்கள் ஆகியவையும் கொடுக்கப் பெறுதல் உண்டு.

இப்பகுதி நூலின் முன்னுரை, நூலைப் பற்றி ஆசிரியர், பதிப்பாசிரியர் முதலியோர் குறித்துள்ள விவரங்கள், சாத்துக் கவிகள், பாயிரப் பகுதிகள், நூலின் முற்குறிப்பு பிற்குறிப்புக்கள் ஆகியவற்றினை அடியொற்றியே பெரும்பாலும் எழுதப் பெற்றன. ஆகவே, பெரும்பான்மை விளக்கங்கள் மேற்கோள் போன்று அவ்வந் நூல்களில் சுட்டப் பெற்றுள்ள வாக்கியங்களைப் பயன்படுத்தியே தரப் பெற்றிருக்கின்றன. எனவே, இப்பகுதியில் சென்ற நூற்றாண்டு ஆசிரியர்களின் உரைநடைப் பாங்கும் சிற்சில இடங்களில் விரவி வருதல் காணலாம்.

மேலும், இவ்விளக்கப் பகுதியில் அடுத்தடுத்து வரும் ஒரே நூலின் படிகளுக்கு ஒரே வகையான விளக்கம் ஒரு சில இடங்களில் இடம் பெற்றிருக்கின்றன. அந்நூல்கள் முன்பு வெவ்வேறு ஆண்டுப் பகுதிகளில் அமைந்திருந்தமையின், தனித் தனியாக விளக்கம் குறிக்கப் பெற்றி

ருந்தன. அவற்றைப் பொருட்பாங்கில் ஒருங்கு தொகுக்கும்போது இப்பொழுது அடுத்தடுத்து ஒரே பகுதியில் அவை அமைந்துவிட்டன. அங்ஙனம் அமைந்த நூல் விளக்கங்களில் பலவும் பின்பு கவனித்து நீக்கப் பெற்றன. ஆயினும் தப்பித்தவறி ஒருசில இடங்களில் அவை இடம் பெற்றுவிட்டன. இங்ஙனம் கூறியது கூறல் போன்று காணும் பகுதிகள் மிகச் சிலவே. இனி, அச்சாகப் போகும் நூல் விவர அட்டவணையின் பிந்திய பகுதிகளில் இவ் விளக்கப் பகுதி மிகவும் கவனமாகப் பரிசோதித்து அமைக்கப் பெறும்.

## நூலின் பதிவு எண் குறிப்பு

பதிவு எண் குறிப்புக்கள் எந்த ஆண்டில் எந்தக் காலாண்டில், எந்த எண்ணுகை ஒரு நூல் 1867-ஆம் ஆணடுச் சட்டப்படிப் பதிவு செய்யப் பெற்றுள்ளது என்பதைப் புலப்படுத்தும். இத்தமிழ் நூல் விவர அட்டவணையின் முதலாவது எண்ணின viii ஆவது எண் குறிப்பு 116/1889/ I என்பதாகும். இது, சாஸ்திர சங்கிரஹம் எனனும் நூற்றொகை விளக்கம் எனப் பெயரிய அந்நூல் 116 ஆவது எண்ணுகை 1889-ஆம் ஆண்டில் முதல் காலாண்டுப் பருவத்தில் (first quarter) பதிவு செய்யப் பெற்றது என்பதைக் காட்டும்.

குறித்த ஒரு நூலைப் பற்றி அரசு இதழில் (Gazette) பார்க்க விரும்புவார்கு இந்த எண் குறிப்பு உதவியாக அமையும். மேலும், ஒரு நூலைப் பற்றி ஐயம் நேரில் மேற்படி அரசு இதழின் துணைக்கொண்டு தெரிவதற்கும் இக்குறிப்பு அவசியமாகிறது.

## சில பொது விவரங்கள்

ஒவ்வொரு நூலுக்கும் i முதல் viii எண் அளவாக மேற்குறித்த விவரங்கள் நாப்பெற்றிருக்கும். இவற்றுள் ஏதேனும் ஓர் எண் பகுதியில் உரிய விவரம் தெரியவாராவிடின், அங்கே புள்ளிகள் இட்டுக் காட்டப்பெற்றிருக்கும். சிற்சில இடங்களில் vi என்னும் எண் பகுதியில் புள்ளி இட்டுக் காட்டியிருப்பதைப் பார்க்கவும் (பக்கம் 2, 3, முதலியன). vii -ஆம் எண் பகுதியில் விளக்கம் வேண்டாத இடங்களிலும் புள்ளிகள் இடப்பெற்றிருத்தல் காணலாம். (பக்கம் 2, 3, 4 முதலியன). முகப்புப் பக்கம் அமைக்கப் பெறாத நூல்களும் ஒன்றிரண்டு காணப்பெற்றன. இவற்றிற்கு ii ஆவது எண் குறிப்பும் விடுபட்டுப் போயிருக்கும் (தொ. எ. 1427, 1576, 1728, 1734 முதலியன).

ஒரு நூலுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட பதிப்புப் படிகள் இருப்பின் முதற்படிக்கே எட்டு எண் குறிப்புக்களும் கொடுக்கப் பெறும். பிந்திய படிகளுக்கு முந்திய பதிப்பில் இல்லாத புது விவரங்கள் மட்டுமே சுட்டப் பெற்றிருக்கும். பிந்திய படிகளில் விடுபட்டுள்ள எண்களுக்கு உரிய பொருள்கள் முதற் படியில் கண்டனவேயாம் என்பது இதன் குறிப்பு. பக்கம் 5, 8, 9, 10 முதலியவற்றில் இவ்வகை முறை மேற்கொள்ளப் பெற்றிருத்தல் காணலாம்.

ஆசிரியர் பெயர், நூற்பெயர் முதலியன எல்லாம் அவ்வந் நூல்களில் காணுமாறே மேற்கொள்ளப் பெற்றன. செய்கப்துல் காதர்—சைகப்துல் காதர், திருச்சிராப்பள்ளி—திருச்சினுப்பள்ளி, ப்ரஸ்—பிரஸ், சென்ன பட்டணம்—சென்னப்பட்டணம், மநோன்மணி விலாசவச்சுக் கூடம்—மனோன்மணி விலாசவச்சுக் கூடம்—என்பன போன்று எழுத்து சிறிது மாறுபட்ட வடிவங்களும் அந்தந்த நூல்களில் உள்ளபடி அவற்றை அமைத்ததன் விளைவே. ஆங்கிலத்தில் அமைந்த ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகப் பெயர்களை அவ்வாறே தமிழில் ஓசை பெயர்த்தெழும்போது (Transliteration) எழுத்து வடிவங்களில் ஓர் ஒருமைப்பாடு அமைக்கக் கூடவில்லை. உதாரணமாக, ஈவாங் லூத்மிஷின் பிரஸ், ஈவான்ஞ்லூத் மிஷன் பிரஸ் என்றும் இன்டியா பிரஸ், இண்டியாபிரஸ் என்றும் வருவன போல்வனவற்றைக் கூறலாம். இவை போன்றவை இங்ஙனம் ஓசை பெயர்த்தெழுதுவதில் நேர்ந்த எழுத்து மாறுபாடுகளாகும்.

## பத்திரிகை விவரம்

ஒரு சில பத்திரிகைகளின் தனி இதழ்கள் சிலவும் இந்தப் புத்தகத் தொகுப்பில் உள்ளன. அவை பற்றிய விவரங்களை அவ்வத் தொகுதியின் ஈற்றில் தனிப்பட்ட ஒரு பிற்சேர்க்கையாக அமைக்கக் கருதியுள்ளோம். சென்ற நூற்றாண்டுப் பத்திரிகைகளில் இதில் சேர்ந்துள்ளவற்றின் விவரம் முதல் தொகுதியின் ஈற்றில் தனிப்படக் கொடுக்கப் பெறும்.

## நூல் அகர வரிசை, ஆசிரியர் அகர வரிசைகளின் அமைப்பு

இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணையில் அடங்கிய நூல்களையும் அவற்றின் ஆசிரியர்களையும் எளிதில் அறிந்துகொள்ள வழிகாட்டுவன நூல் அகர வரிசையும் ஆசிரியர் அகர வரிசையுமே. நூல் அகர வரிசையில் நூற்பெயரை அடுத்து அதன் ஆசிரியர் பெயரும், ஆசிரியர் அகர வரிசையில் ஆசிரியர் பெயரை அடுத்து நூற்பெயரும் சுட்டப் பெறும். ஓர் ஆசிரியரின்கீழ் ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள் வரின், அந் நூற்பெயர்கள் அகராதியாக அமைக்கப்பெறும். இந்த அகராதிகளுக்குக் குறிப்பு எண்ணுகத் தொடர் எண் சுட்டப்பெறும். ஆகவே, இந்த எண்ணைக்கொண்டு எந்த ஒரு நூலையும் ஆசிரியரையும் எளிதில் கண்டு கொள்ளலாம்.

## முதல் தொகுதியின் முதல் பகுதியில் அடங்கிய நூல்கள்

முன்னர்க் குறிப்பிட்டபடி இப்பொழுது வெளிவருவது முதல் தொகுதியின் முதல் பகுதி ஆகும். இந்த முதல் பகுதியில் 1,774 நூல் தொகுதிகள் இடம் பெற்றுள்ளன. மற்றும் இத்தொகுதிகளோடு இணைந்து கிடக்கும் நூல்களின் எண்ணிக்கை 402. ஆக 2,176 நூல்களின் விவரங்கள் இதன்கண் உள்ளன.

## பதிவு செய்யப்பெற்ற நூல்களில் தவறியவற்றின் விவரம் காணும் வகை

இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணை 1867-ஆம் ஆண்டுச் சட்டப்படி பதிவு செய்யப் பெற்ற நூல்களுக்கே உரியது என முன்பு சுட்டப் பெற்றது. பதிவு செய்யப்பெற்ற அனைத்து நூல்களும் ஆவணக்களரிக்கு வந்து சேரவில்லை. ஒருசில நூல்கள் கெட்டுப் போயிருக்கின்றன என்று தெரிய வருகிறது. இவ்வாறு தவறிய நூல்களைப் பற்றிய விவரக் குறிப்புக்களை அந்தந்த ஆண்டுகளில் வெளிவந்த அரசு இதழ் (Gazette) கெஜிட்டினை ஒப்பு நோக்கிக் கண்டுகொள்ளக்கூடும். அத்தகையதொரு முயற்சியும் இத்தமிழ் நூல் விவர அட்டவணை வெளியீடுகளின் பின் கவனிக்கப் பெறலாம். முன்பு பதிவு செய்யப் பெற்றிருந்தும், இப்பொழுது கிடைக்காது போய்விட்ட நூல் விவரங்களையும் தனிப்படத் தொகுத்துப் பின்னர் வெளியிடின், நூல் விவரம் நமக்குத் தெரியவருவதோடு, வேறு எங்கேனும் அவைகள் முடங்கிக் கிடைப்பின் தேடித் தொகுப்பதற்கும் உதவியாக அமையும்.

## புதுச்சேரியில் பதிவு செய்யப்பெற்ற தமிழ் நூல்கள்

தவிரவும் பல நூல்களின் உரிமையாளர்கள் தத்தம் நூலோடு வெளிப் படுத்தியுள்ள விளம்பரப் பகுதியில் தமது நூலைச் சென்னையில் மட்டு மன்றி, அந்நாளில் பிரஞ்சு நாட்டு ஆளுகைக்கு உட்பட்டிருந்த புதுச் சேரியிலும் காரைக்காலிலும் உரிமை பதிவு செய்திருப்பதாகவும், ஆகவே அதனைப் பிறர் அச்சிடுதல் சட்ட விரோதம் என்றும் குறித்துள்ளனர். இதனால் தமிழ் நூற் பிரதிகள் பல புதுச்சேரி-காரைக்கால் அரசாங் கத்தில் இருத்தல் கூடும் என்று தெரியவருகிறது. உரிமையாளர்கள் சுட்டியுள்ள வகையில் புதுச்சேரியில் தமிழ்ப் பிரதிகள் உளவா என்பதும், உளவாயின் அவை எந்நிலையில் உள்ளன என்பதும் புதுச் சேரி அரசாங்கத்தாரைக் கேட்டுத் தெரியவேண்டுவனவாயுள்ளன. பதிப்பு நூல்கள் புதுச்சேரியிலும் இருக்குமாயின், தமிழ் நூல் விவர அட்டவணை வெளிவந்த பின், அவற்றையும் ஒப்புநோக்கி இதில் இடம் பெறாத நூற்பிரதிகளைப் பற்றிய விவரங்களைத் தனிப்படச் சேகரிப்ப தோடு அந்த நூல்களையும் பெற்று இந்த நூற் கூட்டத்தோடு சேர்க்கவும் செய்யலாம். மேற்குறித்த முயற்சிகளினால் தவறிப்போன நூற்படிகளில் பெரும்பாலானவற்றைப் பெறுதலும் கூடும்.

## பதிவு செய்யப் பெறாத நூல்கள்

1867-ஆம் ஆண்டுச் சட்டப்படி உரிமை பதிவு செய்யப் பெறாத நூல் களும் அந்நாளில் பலவாக இருத்தல் இயல்பே. 1867-ஆம் ஆண்டு தொடங்கி அச்சிட்ட எல்லா நூல்களும் உரிமை பதிவு செய்ய அனுப்பப் பெறவில்லை. இங்ஙனம் பதிவு செய்யப் பெறாத நூல்கள் எத்துணைய என்று அறிதல் அத்துணை எளிதன்று.

## 1867-ஆம் ஆண்டிற்கு முற்பட்ட அச்சுப் படிகள்

கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலேயே தமிழ் நூல்கள் அச்சிடத் தொடங்கி யுள்ளனர் என்று தெரியவருகிறது. இந்திய மொழிகளிலேயே தமிழ் மொழியில்தான் முதன் முதல் அச்சு எழுத்துக்கள் ஏற்பட்டு நூலும்

அச்சிடப்பெற்றது. இந்தப் பணியை முன்னின்று செய்தவர்கள் மேலை நாட்டினின்று இந்நாட்டிற்குக் கிறித்துவமதம் பரப்பும் பொருட்டு வந்த பாதிரிமார்களேயாவர். "டௌட்ரினு கிரிஸ்டா" (Doutrina Christa) என்னும் நூல் தமிழில் கி.பி. 1578-ல் இந்தியாவில் செய்யப்பட்ட எழுத்துக்களைக் கொண்டு (Indian types of Malabar letters) அச்சிடப்பெற்றதாம்[1]. இதுவே அச்சிட்ட முதல் தமிழ் புத்தகம். பின் ஜர்மன் நாட்டில் செய்யப்பெற்ற எழுத்துக்கள் முதலியவற்றைக் கொண்டு தரங்கம்பாடியில் பாதிரிமார்கள் நல்ல முறையில் அச்சகம் தோற்றுவித்தனர். சீகன் பால்கு முதலியோர் இதன் வாயிலாக நூல் பல அச்சியற்றிப் பரப்பி வந்துள்ளனர். இந்த அச்சகத்தின் வாயிலாக 17-ஆம் நூற்றுண்டில் பல நூல்கள் அச்சிடப்பெற்றவனவாகத் தெரிய வருகிறது[2]. பின், சென்னை முதலிய பிற இடங்களிலும் அச்சகங்கள் ஏற்பட்டு நூல்கள், துண்டுப் பிரசுரங்கள் முதலிய பலவும் அச்சியற்றி வந்துள்ளனர். ஆயினும், 19-ஆம் நூற்றுண்டில்தான் நம் நாட்டில் அச்சகங்கள் அங்கங்கே பல இடங்களில் நிலைபெற்று நூல்கள் பல வெளி வரலாயின. ஆகவே, 1867-ஆம் ஆண்டிற்கு முற்பட்டே பல ஆண்டுகளாகப் பற்பல நூல்கள் வெளிவந்திருத்தல் வேண்டும். இங்ஙனம் காலத்தால் மிக முந்திய அச்சுப் பிரதிகள் எங்கேனும் பழைய நூல் நிலையங்களிலும், தனிப்பட்டவர்களிடத்தும், சமய நிலையங்கள் முதலியவற்றிலும் இருத்தல் கூடும். இத்தகைய பழம் பதிப்பு நூல்களில் கிடைப்பனவற்றை ஒருங்கு தொகுத்துப் பாதுகாப்பதும் ஆராய்ச்சித் துறைக்கு அவசியமானதே.

### வெளிவந்துள்ள தமிழ் நூல் விவர அட்டவணைகள்

தமிழ் நூல் விவரங்களை 1958-ஆம் ஆண்டு தொடக்கமாகக் கல்கத்தாவிலுள்ள இந்திய தேசிய நூலகத்தார் தனிப்பட வெளியிட்டு வருகின்றனர் என்பது முன்பே குறிக்கப்பெற்றது. இவர்கள் வெளியீடாகிய "இந்திய தேசிய நூல் விவரப் பட்டியல்", (Indian National Bibliography Tamil Fasicule) நவீன முறையில் அமைந்த வகுப்பு முறைப்பட்டியலாகும். இதனைத் தொடர்ந்து தேசிய நூலகத்தார் நூல் விவரம் வெளியிட்டு வருவதால், 1957-ஆம் ஆண்டு வரையில் வெளிவந்த நூல்களின் விவரங்கள் தனிப்பட வெளியிடுவது இன்றியமையாததாகிறது. 1951-ஆம் ஆண்டு வெளிவந்த நூல்களுக்கு மட்டும், சென்னை இராச்சிய நூல் விவர அட்டவணை (Madras State Bibliography) ஏற்கெனவே பொது நூலக நெறியாளரால வெளியிடப்பெற்றிருக்கிறது. இதுவும் ஒரு வகுப்பு முறைப்பட்டியலே.

---

[1] Anant Kahba Priolkar, The Printing Press in India, 1958—pp. 9, 10

[2] Ibid, p. 44.

## ஆங்கிலத்தில் வெளிவந்த விவர அட்டவணைகள்.

கிறிஸ்துமதப் பிரசாரகராகிய ஜான் மர்டாக்(John Murdoch)என்பார். கி.பி. 1865-ல் விவர அட்டவணை ஒன்று வெளிப்படுத்தியுள்ளார்[1]. இக்கால நூல் விவர அட்டவணைகளினும் வேறுபட்டதொரு முறையில் இந்நூல் அமைந்துள்ளது. ஒவ்வொரு நூலையும் குறித்து விளக்கக் குறிப்பு வெளியிட்டிருத்தல் இதன் தனிச் சிறப்பாகும். இவ்வகையில் ஓர் இலக்கிய வரலாற்று நூல் போன்றுள்ளது இவரது விவர அட்டவணை.

1867 முதல் 1889 வரை சென்னை அரசாங்கத்தில் பதிவு செய்யப் பெற்ற எல்லா மொழி நூல்களுக்கும், 1894-ஆம் ஆண்டில் வெளி வந்துள்ள அரசாங்க வெளியீடு ஒன்றும் உள்ளது[2]. இதில் மொழி வாரியாக நூல்கள் பொருட்பாகுபாட்டில் அடைவுபடுத்திக் கொடுக்கப் பட்டுள்ளன. நூற் பெயர், ஆசிரியர், பதிப்பாசிரியர், வெளியீட்டாளர் விவரம், வெளிவந்த ஆண்டு என்னும் இவ்விவரங்கள் மட்டுமே சுட்டப் பெற்றிருக்கின்றன.

பின்னர், இலண்டன் மாநகரிலுள்ள ஆங்கில நாட்டுப் பொருட்காட்சிக் கூடத்தில் (British Museum) சேகரிக்கப் பெற்றுள்ள தமிழ்ப்பதிப்புச் சுவடிகளுக்குக் கி.பி. 1909-ஆண்டில் நூல் விவர அட்டவணை ஒன்று வெளியிட்டிருக்கின்றனர்[3]. இது ஜி. யூ. போப் பாதிரியாரால் தொடங்கப்பெற்று, பின்னர் அப் பொருட்காட்சிக் கூட நூலகத் திலே கீழ்த் திசைப் பதிப்பு நூல்களுக்கும் எழுத்துச் சுவடி களுக்கும் பாதுகாவலராகப் பணிபுரிந்த எல். டி. பர்னெட் என்பவரால் முற்றுவிக்கப் பெற்றது. மேலும், 1931-ஆம் ஆண்டு அதற்கு அனுபந்த நூல் . (Supplement) ஒன்றும் பர்னெட் வெளியிட்டுள்ளார்[4]. இந்த அட்டவணைகள் ஆசிரியர் அகர வரிசையில் அமைந்துள்ளன. இறுதியில் பொருட்பாகுபாட்டு அகராதி, நூலகராதி முதலியனவும் தரப்பட் டுள்ளன. இந்நூல்களின் வாயிலாகப் பழம் பதிப்புச் சுவடிகள் பல வற்றின் விவரங்கள் புலனுகின்றன.

## இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணையின் தோற்றம்.

இப்பொழுது தொகுத்து வெளியிடப்பெறும் இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணை தயாரிப்பதற்கு முன்பு நிகழ்ந்த முயற்சி ஒன்றினையும் ஈண்டுக் குறிப்பிடுதல் பொருத்தமாகும். சென்னைப் புத்தகாலயப் பிரசார சங்கத்தார், சென்னை ஆவணக்களரி நூலகத்தே உள்ள பதிவு செய்யப் பெற்ற நூல்களுக்கு விவரங்கள் தொகுக்கச் சிலரை நியமித்துப் பெரும் பாலும் எழுதித் தொகுத்தனர். ஆனல், பின்னர் அவற்றை முறையாக

---

[1] Classified Catalogue of Tamil Printed Books with Introductory Notices—Compiled by John Murdoch—1865.

[2] Classified Catalogue of the Public Reference Library, consisting of books registered from 1867—1889.

[3] A Catalogue of the Tamil Books in the Library of the British Museum—Compiled by L.D. Barnett, M.A., LITT. D. and the Late G. U. Pope—1909.

[4] A Supplementary Catalogue of the Tamil Books in British Museum—Compiled by L. D. Barnett, M.A., LITT.D.—1931.

மேற்பார்வையிட்டுப் பரிசோதித்து ஒழுங்குபடுத்திச் செப்பம் செய்து வகைப்படுத்தும் பணி நடைபெறவில்லை. இந்நிலையில் விவரம் எழுதிய சீட்டுக்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தாருக்கு விற்றுவிட்டனர். முதற்கண், அந்தச் சீட்டுக்களைப் பெற்று விவர அட்டவணையை வெளியிடலாம் என்று கருதி, அதுபற்றி அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தினரை அரசாங்கம் கேட்டது. அவர்கள் எவ்வகையான திருத்தமும் இன்றிச் சீட்டுக்களை வெளியிடவும் திருத்தம் செய்து வெளியிடவும் செலவாகும் தொகை பற்றிய குறிப்பைக் கொடுத்தனர். பின்னர், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தார் இச் சீட்டுக்களை முறைப்படுத்தி வெளியிடுவதிலும், அவர்களுக்குச் சென்னை அரசாங்கம் பழைய நூற் படிகளைக் கொடுத்து உதவுவதிலும் சில சிக்கல்கள் ஏற்பட்டதனால், தனிப் பட்ட முறையில் விவரம் தயாரித்து அரசாங்க வாயிலாக வெளிப்படுத்து தல் நலம் என்று எண்ணித் தமிழ் வளர்ச்சி ஆராய்ச்சி மன்றத்தில் அப்பணியைச் செய்ய அரசாங்கம் வழிவகை செய்தது. இதன் விளைவாகவே இந்தத் தமிழ் நூல் விவர அட்டவணை இன்று வெளிவரத் தொடங்குகிறது.

## வேண்டுகோள்

இந்த அட்டவணை முற்றும் குற்றங் குறைபாடுகள் இன்றி அமைந் துள்ளது என்று சொல்லிவிட முடியாது. எங்கேனும் ஒன்றிரண்டு எழுத்துப் பிழைகளும், ஒருசில குற்றங் குறைபாடுகளும் இதன்கண் இருத்தல் கூடும். மனித முயற்சியில் இவற்றை முற்றும் அறவே களைந்து விடுதல் அரிது என்பது யாவரும் அறிந்ததே. இதனை மேலும் சீர் திருத்தி அமைத்தற்குத் தக்க வழிமுறைகளை அறிஞர்கள் எடுத்துக் காட்டினால், இனி வரும் பகுதிகளிலாயினும் அவற்றை மேற்கொண்டு திருத்தம் செய்ய இயலும்.

பதிப்பாசிரியர்

## குறியீடுகளும் அவற்றின் விளக்கமும்

| | |
|---|---|
| உ.ப. .. .. .. | உரைநடை நூல் பக்கங்கள். |
| உ.ப். + செ.மூ.எ. .. | உரைநடை பக்கங்கள், செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| உ.ப.+ செ.மூ.ப. .. | உரைநடை பக்கங்கள், செய்யுள் மூலம் பக்கங்கள் (அல்லது) உரைநடையும் செய்யுளும் சேர்ந்து பக்கங்கள். |
| செ.மீ. .. .. | சென்டி-மீட்டர். |
| செ.மூ.எ. .. .. | செய்யுள் மூலம் எண்ணிக்கை. |
| செ.மூ.உ.எ. .. .. | செய்யுள் மூலமும் உரையும் எண்ணிக்கை. |
| செ.மூ.ப. .. .. | செய்யுள் மூலம் பக்கங்கள். |
| செ.மூ.உ.ப. .. .. | செய்யுள் மூலமும் உரையும் பக்கங்கள். |
| தொ.எ. .. .. | தொடர் எண். |
| தொ-து. .. .. | தொகுத்தது. |
| மொ-து. .. .. | மொழிபெயர்த்தது. |
| i. .. .. .. | நூலின் பெயர். |
| ii. .. .. .. | பதிப்பாசிரியரின் பெயரும், பதிப்பகமும். |
| iii. .. .. .. | நூல் பதிப்பித்த ஆண்டு. |
| iv. .. .. .. | நூலின் அளவு (உள்ளடக்கம்). |
| v. .. .. .. | நூலின் வடிவ அளவு. |
| vi. .. .. .. | விலை. |
| vii. .. .. .. | விளக்கம். |
| viii. .. .. .. | நூலின் பதிவு எண் குறிப்பு. |
| [ ] .. .. .. | இவ்விதம் பகர அடைப்புக்குள் உள்ளவை ஒரு நூலோடு இணைந்துள்ள வேறு நூல்களின் பெயர்கள். |
| ...... .. .. | இவ்விதம் புள்ளி இட்ட இடங்கள் விவரம் தெரிய இயலாத பகுதிகளும் விளக்கம் எழுதப்பெறாத பகுதிகளும் ஆகும். |
| & . .. .. | ஒன்றுக்கு மேற்பட்ட ஆசிரியர், பதிப்பாசிரியர், பதிப்பகங்களைக் காட்டும். |

# பொருள் அட்டவணை

## 000 பொது நூல்கள்

## 400—மொழியியல்

## கோலன் பகுப்பு முறையில் பொருள் அட்டவணை

z. பொதுவியல்
1 பொது அறிவியல்
2 நூலக இயல்
3 புத்தக இயல்
4 செய்தித் தாளியல்
A அறிவியல்
B கணிதம்
C பௌதிகம்
D பொறி இயல்
E இரசாயனம்
F தொழில் இயல்
G உயிர் நூல்
H புவி இயல்
HZ சுரங்க இயல்
I தாவரவியல்
J விவசாயம்
K விலங்கு நூல்
L மருத்துவம்
M பயனுறு கலைகள்
△ சித்தியல்
N அழகுக் கலைகள்
O இலக்கியம்
P மொழி இயல்
Q சமயம்
R தத்துவம்
S உளநூல்
T கல்வி
U நில நூல்
V சரித்திரம்
W அரசியல்
X பொருளியல்
Y சமூக இயல்
Z சட்டம்




# தமிழ் நூல் விவர அட்டவணை

## 000 — பொது நூல்கள்

### 040 – பொதுக் கட்டுரைகள்

### 049·94811–தமிழ்க் கட்டுரைகள், சொற்பொழிவுகள்

**சுந்தரம் பிள்ளை, பி.**

1. i. சாஸ்திர சங்கிரஹம் என்னும் நூற்றொகை விளக்கம் : பொதுவியல்; ii. ஊ. புஷ்பரதச் செட்டியார் ; கலாரத்நாகர அச்சுக் கூடம் ; iii. 1889 ; iv. உ. ப. 94 ; v. 22× 14 செ.மீ.; vi. . . .; vii. திருவிதாங்கோட்டு அரசியலார் ஆதரவில் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை செய்த ஒரு சொற்பொழிவு. தற்கால முறைமைக்கு ஏற்க சாஸ்திரங்களை எத்தனை வகுப்பாய் வகுக்கலாம் என்பதையும் அவற்றின் முக்கிய முறைமையையும் விளக்குவது. viii. 116/1889/I.

z (w6)

**பிரணதார்த்தி ஹரசிவன்**

2. i. வியாச மஞ்சரி ; ii. ஸ்டார் ஆப் இந்தியா அச்சுக்கூடம், சென்னை ; iii. 1900; iv. உ. ப. 108; v. 18× 12 செ. மீ.; vi. 0–4–0 ; vii. இதில் உள்ள கட்டுரைகள் மாணக்கர்களுக்கு ஏற்றவை. லோயர் செகண்டரி மாணக்கர்களுக்கு ஏற்ற கட்டுரைகள் உடுக்குறியிட்டுக் குறிக்கப் பெற்றுள்ளன. viii. 280/1900/IV.

z (w6)

3. i. முடிவுரைச் சூறுவளி —"நியாயவாதி" எழுதியது ; ii. மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை, சென்னை ; iii. 1895 ; iv. உ.ப. 8; v. 21× 14 செ.மீ.; vi. . . . . ; vii. 1893 ஜனவரி 28-ல் "நாகை நீலலோசனிப் பத்திரிகையின் பதினாறுவது பக்கத்தில் வெளியான முடிவுரை" என்பது குறித்து மறுப்பாக அமைந்தது. இது சோமசுந்தர நாயகர் என்பாருக்கு விடுத்த மறுப்பாகும். viii. 134/1896/II.

z (w6)

**வேங்கடாசாரியார், எஸ்.**

4. i. விவேக விளக்கம் ; ii. கிரேவ்ஸ் குக்ஸன் அண்ட் கம்பெனி ; ஸ்காட்டிஷ் பிரஸ், சென்னை ; iii. 1870 ; iv. உ.ப. 46 ; v. 19× 11 செ. மீ.; vi. 0–3–0 ; vii. பெண் கல்வி, சிசு விவாஹம், பெண்களை விற்றல், பேய் வரலாறு, விஷ பேதி, மெரியா பலி, என்னும் ஆறு கட்டுரைகள் இதன்கண் உள. viii. 32/1871/III.

z (w6)

